உ

ஸ்ரீ சிவாய குரவே நம:

ஸ்ரீ அலங்காரவல்லீ ஸமேத ஸ்ரீ ஜராவதேச்வரர் அருள்புரிகிற

# திருநியமம் என்ற நேமம் க்ஷேத்ரத்தின் பெருமை

## பாரிஜாதவநக்ஷேத்திர மாஹாத்ம்யம்

*(பிரம்மாண்ட புராணத்தின் பிரும்மோத்தர கண்டத்திலுள்ளது).*

அத்தியாயம் - 1

*(பாரிஜாதம் எனும் கல்பக விருக்ஷம் பூமியில் தோன்றிய வரலாறு)*

திரு நியமம்எனும் க்ஷேத்திரம் முன்னர் பாரிஜாதம் எனும் கல்பக மரங்கள் அடர்ந்த காடாக இருந்தது. சிறந்த இந்த சிவக்ஷேத்ரத்தின் பெருமையை சௌனகர் முதலான முனிவருக்கு ஸூதர் சொல்கிறார். இன்று நடப்பது சுவேத வராஹ கல்பத்தின் வைவஸ்வத மன்வந்தரம். இதற்கு முன் பிராம்ம க்ல்பத்தில் ரதந்தர மன்வந்தரத்தில் தேவர்களும்,அஸுரர்களும் கூடித் திருப்பாற்கடலைக் கடைந்து அமுதத்தை ஒரு கலசத்தில் பெற்றனர். அதனுடன் வெளியான ஹாலாஸ்ய விஷத்தைச் சிவன் விழுங்கினார். லக்ஷ்மீ, உச்சைச்சிரவம் என்ற குதிரை, ஐராவதம் என்ற யானை, தன்வந்தரி என்ற ஓஷதிகள் ஏந்திய வைத்யர் முதலானோர் அமுதத்துடன் பாற்கடலிலிருந்து வெளியாயினர். உணவுப் பயிர்களுக்கான விதைகள் வெளியாகி பூமியை நிரப்பின.

நடுவே வைக்கப் பெற்ற அமுத கலசம் சிறிது அசைய, அமுதம் சிந்திப் பூமியில் ஆயிரத்தெட்டு துளிகளாகச் சிதறி விழுந்தது. நிழல் தருபவையும் பூவும், காயும் பழமும் நிறைந்தவையுமான தென்னை, மா, பலா, பாக்கு, புன்னை, சம்பகம், அரசு, கருங்காலி, பில்வம், வன்னி, ஆல், பாதிரி, மருது, புங்கு, மூங்கில், லோத்திரம், இலந்தை, நெல்லி முதலான மரங்கள் தோன்றின. விரும்பியதை நல்கும் பாரிஜாதமரம் நீண்டு உயர்ந்து தோன்றித் தன் விதைகள் மூலம் ஆயிரக் கணக்கான மரங்களையும் விளைவித்தது. அந்த

பாரிஜாதப் பெருங்காடே இந்த க்ஷேத்திரம். அமுதத் துளிப்பட்டதால் தெய்வீக அம்சம் நிறைந்திருந்தது. இங்கு தவமியற்ற வந்த முனிவரின் மனம் எளிதில் அடங்கி இறைவனைக் காண உதவியதால் எண்ணற்ற முனிவர்கள் இங்கு தங்கி தவமியற்றியதால் தபோவனமாகியது.

பிரும்மா படைப்பில் வெற்றி பெற்று இறுமாப்படைந்து தானே உலகின் ஈச்வரன் என உலகிற்கு வெளிப்படுத்தினார். அவரது செருக்கை அடக்க சிவபெருமான் பிரும்மாவின் ஐந்தாவது தலையைக் கிள்ளி எறிந்தார். பிரும்மா தன் குறை உணர்ந்து. சிவாபராதம் நீங்க வழி தேடினார். சிவனது ஏவலால் வானில் எழுந்த ஆகாசவாணி ''பாரத தேசத்தில் சிறந்த இடத்தில் சிவலிங்கம் ப்ரதிஷ்டை செய்து வழிபடத்துயர் நீங்கும் என ஒலித்தது. பிரும்மா உடன் பூதலம் வந்து தவமியற்ற ஏற்ற பூமியைத் தேடியபோது திருசிர வனத்தருகே காவேரியின் கரையில் தவம் புரிகிற காசியபமுனிவரைக் கண்டார். ஈசனின் அருளைப் போல் தண்டனையும் மேனிலை தருவதே என உணர்த்திய காசியபர் காவேரிக் கரையில் அமுதத் துளி விழுந்த இடத்தில் எழுந்த பாரிஜாத வனத்தைக் காட்டி அங்கு சிவலிங்கம் பிரதிஷ்டை செய்து முறைப்படி பஞ்சாக்ஷர மந்த்ர ஜபத்துடன் பதினறு உபசாரங்களுடன் சிவபெருமானை வழிபட வழிகாட்டினர்.

பிரும்மா சிவனை வேண்டி அவரை உள்ளத்தினுள் நிறுத்தி, காவேரியின் மணலை லிங்கமாக அமைத்துப் பாரி ஜாதமரத்தின் கீழ் ப்ரதிஷ்டை செய்து வழிபட்டு பஞ்சாக்ஷர மந்த்ர ஜபம் செய்து தவம் இயற்றினர். அந்த வழிபாட்டை ஏற்ற சிவபெருமான் மகிழ்ந்து பிரும்மாவின் தவற்றை மன்னித்து விட்டதாக அருளினர். பிரும்மா பெருமானை வணங்கித் துதித்தார்.

''பாரிஜாத மரத்தினடியில் பிரும்மா வழிபட்ட சிவலிங்கத்தில் நான் எக்காலமும் எப்போதும் வசிப்பேன். காவேரி நீரில் நீராடி என்னை வழிபடுபவருக்கு மேனிலை அருள்வேன்'' என பிரம்மாவிற்கு வரம் தந்தார். அதனல்

பிரம்மசேச்வரம் என அந்த க்ஷேத்ரத்திற்குப் புகழ் ஏற்பட்டது. பிரும்மா தேவச் சிற்பியான விச்வகர்மனேக் கொண்டு ஆலயமெழுப்பினர். க்ருத யுகத்தில் பாரி ஜாதவனமாயிருந்தது, திரேதா யுகத்தில் பிரும்மேசுவரமெனவும், துவாபரத்தில் இந்த்ர நகரம் எனவும், கலியில் ஐராவதேச்வரம் எனவும் புகழ் பெற்றது.

விசுவகர்மா பிரும்மாவின் ஆணைப்படி ஐந்து பிராகாரங்களும் மண்டபங்களும் அமைத்து, கணேசர், க்ஷேத்ரபாலர்முதலானோருக்கும்ஆலயம் அமைத்தார். நடுவில் லிங்கத்தைப் ப்ரதிஷ்டை செய்து அதன் வலப்புறத்தில் விசுவ கர்மேசுவரம் என்ற தீர்த்தத்தையும் அமைத்தார். ஊர்வலம் வர பிரும்மரதம் அமைத்தார். ப்ரஹ்மோத்ஸவம் கொண்டாடப் பெற்றது.

பிரும்மா அசுவினி நக்ஷத்ரத்தில் ஹம்ஸக்கோடி ஏற்றி வேள்வி புரிந்து ரதோத்ஸவம் கொண்டாடி மகநட்சத்திரத்தில் பிரும்ம குண்டமமைத்து அதில் கங்கை முதலிய புண்ணிய நதிகளை வரும்படி வேண்டித் தங்கவைத்து நீராடி மகிழ்ந்தார். தக்க வேதியர்களுக்கு 100 கிராமங்களைத் தந்து வாழவைத்தார். 1008 அந்தணர்களுக்கு இருப்பிடம் தந்து தங்கி வாழ வசதிகளை அமைத்தார்.

மக்கள் சிவபெருமானது வழிபாட்டில் பக்தியுடன் ஈடுபட்டுச் சிறப்புடன் வாழ்ந்தனர். க்ஷேத்ரத்தின் பெருமையால் அங்கு புரிந்த ஜபமும் தவமும் வழிபாடும் பன்மடங்கு பலன் தந்தன. ப்ரதோஷ வேளையில் ப்ரம்மேச்வரனைப் பாலால் நீராட்டி வழிபட்டவர் சிவநிலை பெற்றனர். அங்கு தங்கி வாழ்ந்து பல புண்ய நதிகளின் ஸங்கமம் பெற்ற தீர்த்தங்களிலும் காவேரியிலும் நீராடிச் சிவனை வழிபட்டவர் சிவநிலை பெற்றனர்.

—★—

## அத்தியாயம் -2

## இந்திரபுரம்

சிவனது மந்த்ரங்கள் பல உண்டு. அவற்றில் ஐந்து அக்ஷரங்கள் கொண்ட பஞ்சாக்ஷர மந்திரமே மிகச் சிறந்தது.

அந்த மந்திரத்தை ஜபிக்க ஏற்ற க்ஷேத்திரங்களில் பிரும்மேச்வரம் (திருநியமம்) மிகச் சிறந்தது. சிவாபராதத்தால் துன்புறுபவர் இங்கு ஜபம் செய்வதால் துயர் நீங்கப் பெறுவர். நான்கு வேதங்களையும் முறைப்படி கற்று ஓதுதலுக்கான பலனைப் பஞ்சாக்ஷர ஜபத்தால் பெறலாம். குருக்ஷேத்ரம், பதரிகாச்ரமம், மற்ற புனித க்ஷேத்திரங்களிலும் பல்லாண்டுகள் வசிப்பதாலான புண்யம் இங்கு பிரம்ம குண்டத்தில் நீராடி பிரும்மேசுவரரை வழிபட்டு பஞ்சாக்ஷர மந்திர ஜபம் செய்வதால் கிட்டும். பித்ருக்களின் மன நிறைவு, தூய்மை, பீடைகள் விலகுதல், நோய் நீக்கம், மக்கட்பேறு என விரும்பியதனைத்தும் கிட்டும். சிவ நிலை பெறுவர்.

இந்த க்ஷேத்ரத்திற்கு இந்திர புரம் என்ற பெயரும் உண்டு. விருத்திரன் என்று பெரும் புகழ் பெற்ற அஸுரன், மஹாபாபி, தேவர்களையும் அந்தணரையும் வெறுப்பவன். தேவலோகத்தை வென்று தேவர்களைத் துன்புறுத்தினான். வேள்விகளை அழித்தான். அவனைக் கண்டு உலகம் நடுங்கியது. ஸூர்யனும் சந்த்ரனும் அக்கினியும் தன் நிலை இழந்தனர். வேள்விகள் நின்றன. துன்புற்ற தேவர்கள் பிரும்மாவைச் சரணடைந்தனர். பிரும்மா இந்திரனிடம் தன் சக்தி மிக்க பிரும்மாஸ்திரத்தைத் தந்து வஜ்ராயுதம் பெற வழி கூறினார். ததீசி முனிவரின் முதுகெலும்பிலிருந்து அந்த சக்தி மிக்க வஜ்ராயுதத்தைப் பெற்ற தேவர்கள் பயமகன்றவர்களாக லோஹிதம் என்ற விருத்திரனின் தலைநகரை முற்றுகையிட்டுப் போரிட்டனர். கடும் போர் நிகழ்ந்தது. அஸுரர்கள் போரில் மாய்வதைக் கண்ட விருத்திரன் இந்திரனுடன் சக்தி மிக்க ஆயுதங்களுடன் கடும் போரிட்டான். வரிசையாக ஒவ்வொரு ஆயுதமாக இழந்த அவன் மற்போரில் ஈடுபட்டான். மாயையால் பல ஆயுதங்களைப் புதிதாகப் படைத்தும் அவை வலிவிழந்து பயனற்றுப் போனதால் தளர்ந்து நிற்கிற விருத்திரனை இந்திரன் வஜ்ராயுதத்தால் தலையைத் துண்டித்துக் கொன்றான். விருத்திரன் வீழ்ந்ததும் உலகம் மகிழ்ச்சியுடன் இதனைக் கொண்டாடியது. தேவர்கள் பயம் நீங்கித் தம் தம் இடம் சென்றடைந்தனர். ஆனால் விருத்திரனைக் கொன்ற பாபம் இந்திரனைத் தொடர்ந்து துன்புறுத்தியது. உலகெங்கும்

திரிந்தும் தக்க கழுவாய் பெருத இந்திரன் பிரும்மேச்ரவரரை வழிபட்டு விருத்திரஹத்தி தோஷம் நீங்கப் பெற்ருன்.

—★—

## அத்தியாயம் - 3

### விருத்திர ஹத்தி பாப நீக்கம்

இந்திரன் விருத்திர ஹத்தி பாபம் நீங்க, பல க்ஷேத்ர தீர்த்தங்களில் உரிய வழிபாட்டைச் செய்தான். துயர் நீங்காததைக் கண்டு பிரும்மாவின் ஆணையை ஏற்று. ஜம்பூத் தீவில் பாரத தேசத்தில் காவேரிக் கரையில் அமைந்த புண்ய க்ஷேத்ரங்களில் ஈசனை வழிபட்டான். பாரிஜாத வனத்தை அடைந்து அங்கு தவம் புரிகிற முனிவர்களை வணங்கி பிரும்மேசுவரரைத் தரிசித்து வழிபட்டான். பிரும்ம குண்டத்தில் முறைப்படி வேத மந்த்ரங்கள் கூறி நீராடினுன். தேவி அலங்கார நாயகியை மூன்று தடவை வலம் வந்து, ஐந்து தடவை வணங்கி ஈசனின் வலப்புறத்தில் முன்னிலேயில் அமுத கலசம் வைத்து வழிபட்டான். அங்கேயே ஒரு குடிசை அமைத்துத் தங்கி திருநீறு பூசி ருத்திராக்ஷ மாலேயணிந்து தவமிருந்தான். பனி, காற்று, மழை, வெயில் என எதனேயும் பொருட்படுத்தாமல் காற்றையும் இலேயையும் நீரையும் மட்டுமே உணவாக்கி, ஓராண்டு பஞ்சாக்ஷர ஜபம் செய்தான்.

ஓராண்டின் இறுதியில் சிவபெருமான் எதிரில் தோன்றினுர். பிரும்மஹத்தி பாபத்தை நான்கு கூறுகளாக்கி இந்திரனிடமிருந்து வெளிப்படுத்தி பூமியிலும் மரத்திலும் நீரிலும் மாதரிடமும் பங்கிட்டுத் தந்தார். மாதரிடம் மாதவிடாய் கசிவாகவும் நீரில் நுரையாகவும், மரத்தில் பிசினுகவும், பூமியில் உவர்மண்ணுகவும் அது மாறியது. இந்திரன் தூய்மை பெற்ருன். அந்த யுகத்தில் அந்த க்ஷேத்திரம் இந்திரபுரமாக விளங்கும் என ஈசன் அருள் புரிந்தார்.

இந்திரன் கலசம்வைத்து வழிபட்ட இடத்தில் ஈசனின் தென் கிழக்கில் ஸுதா தீர்த்தத்தை அமைத்து அதன் கரையில் தன் பெயரில் ஒரு லிங்கம் அமைத்து வழிபட்டான். அந்தக் கிணற்றின் நீரைப் பருகுபவன் மேனிலே பெறுவான். சிவராத்திரியன்று, இந்த நீரைக் கொண்டும் காவேரி நீரைக்

கொண்டும் ஈசனை நீராட்டுவதும் ஈசனையும் இந்த ஸுதா தீர்த்தத்தையும் வலம் வந்து வழிபடுவதும் சிறந்தது. ஒவ்வொரு மாத சிவராத்திரியிலும் இவ்வாறு ஒரு ஆண்டு வரை வழிபடுபவன் பாபம் நீங்கித் துயரின்றி இனிது வாழ்வான். மழையின்றி வரட்சியால் ஊர் வாடும்போது ஸுதாதீர்த்த நீராலும் காவேரி நீராலும் ஈசனை நீராட்டி வழிபட மழை தோன்றி ஸுபிக்ஷம் நிலவும். நீர் நிலை நிரம்பிப் பயிர் செழித்து வளர அல்லிப்பூ மலைகளால் ஈசனையும் தேவியையும் அலங்கரித்து 16 உபசாரங்களால் வழிபடுவர். பஞ்சம் நீங்கும்.

மக நட்சத்திரத்துடன் கூடிய மாசிப் பௌர்ணமியில் கலசத்தில் நீர் நிரப்பி ஜலதேவதை மந்திரம் ஜபித்து நீராட்டுவது, வியதீபாதத்தில் கருப்பஞ்சாற்றால் நீராட்டுவது, எனப் பல வழிமுறைகளால் ஈசனையும் ஈசுவரியையும் வழிபடலாம். அவ்வாறு நீராட்டி அலங்கரிக்கப் பெற்ற ஈசனையும் ஈசுவரியையும் தரிசிப்பது எண்ணற்ற பிறவிகளில் செய்த புண்யத்தால் மட்டுமே கிட்டும். முனிவருக்கும் கிட்டாதது இது. இம்மையில் பல நலன்களைப் பெற்று இனிது வாழலாம். ஆயுள் நீளும். துயரம் குன்றும். தூய்மை பெருகும். புகழ் துலங்கும். நல்வாழ்வு அமையும்.

## அத்யாயம் 4

## ரம்பையின் சாபநீக்கம்

தேவஸபையான ஸுதர்மாவில் இந்திரன் மற்ற தேவர்கள் தேவரிஷிகள் முதலானோர் அமர்ந்திருக்க அப்ஸரஸுகளின் ஆடலும் பாடலும் நிகழ்ந்தது. வாத்தியங்கள் ஒலிக்க கந்தர்வர்கள் பாட ஊர்வசி மேனகை ரம்பை முதலானோர் ஆடினர். அப்போது அங்கு வந்த நாரதரும் வீணை வாசித்துக் கொண்டு அங்கே தோன்றினார். அவரும் நடனத்தை ரசித்தார். ஆடலின் வேகத்தில் ஆடுபவரின் முகத்தில் துளிர்த்த வியர்வையை மென் காற்று அகற்றியது. ஆட்டம் முடிந்ததும் மற்ற நர்த்தகிகள் அகன்ற பின்னரும் ரம்பை களைப்பால் மேடையில் படுத்து உறங்கிவிட்டாள். காற்று அவளது ஆடைகளை அகற்றுவதை அவள் உணரவில்லை. ஸபையின் நடுவில் ஆடை கலைந்ததைக் கூட

உணராமல் அயர்ந்திருந்த ரம்பையை நாரதர் கண்டு வெட்கமின்றி படுத்திருக்கிற அவளைச் சபித்தார். பூவுலகில் தோன்றி ஸ்வர்க்க ஸுகமன்றி வாடுவாயாக என்ற நாரதர் சாபத்தைக் கேட்டெழுந்த ரம்பை அறியாமல் செய்த தவற்றை மன்னித்து சாபம் நீங்க வேண்டினுள்.

சிவபெருமானது வழிபாட்டால் அவரது அருள் பெற்றுச் சாபம் நீங்கியவளாக ஸ்வர்க்கம் வந்து சேருவாய் எனக் கூறி நாரதர் மறைந்தார். ரம்பை பாரத தேசத்தை வலம் வந்து பாலாற்றில் நீராடிப் பாடலீசுவரரை வழிபட்டாள். ஸூர்யன் வழிபட்ட ஸ்தலமது. அங்குள்ள முனிவர்களிடம் தன் நிலையைத் தெரிவித்து அவர்களது உபதேசத்தால் பெற்ற பஞ்சாக்ஷர ஜபத்துடன் தவமியற்றி ஈசனை வழிபட்டாள். காற்றையே உண்டு வேறு உணவின்றி தவம் புரிந்தாள்.

இந்திர ஸபையில் இந்திரன் ரம்பை இல்லாக் குறையை உணர்ந்தான். ரம்பையில்லாத ஸபை அவனுக்கு இன்பம் தரவில்லை. பூவுலகில் முனிவர்களுக்கிடையே ரம்பை தவம் புரிவதைத் தெரிந்து கொண்டு அவளை அழைத்துவர சித்திரரதன் என்ற கந்தர்வனை அனுப்பினுன். சித்திர ரதனும் பூவுலகம் வந்து அவளைத்தேடி அலைந்து பாலாற்றங்கரையில் பாடலீசுவரரைக் குறித்துத் தவம் புரிகிற ரம்பையைக் கண்டு இந்திரனது ஆணையைக் கூறி ஸ்வர்க்கம் வரவேண்டினுன். அவள் தவத்தைக் கலைக்கப் பலவாறு முயன்றும் அவன் வெற்றி பெறவில்லை. ரம்பை சிவனது அருள் பெற்றாலன்றி வானுலகம் வர இயலாதெனத் திடமாக எண்ணினுள். கந்தர்வனின் நிர்பந்தத்தைப் புறக்கணித்த அவள் மௌனத்தைக் கடைபிடித்துத் தவமியற்றினுள்.

இந்திரனிடம் சென்ற சித்திரரதன் ரம்பையின் அசைக்க இயலாத தீவிர தவத்தைப் பற்றித் தெரிவித்ததும் இந்திரன் வருந்தினுன். ரம்பை பாலாற்றங்கரையில் தவத்திற்குத் தொடர்ந்து இடையூறு நேர்வதை உணர்ந்து தவம் புரிகிற இடத்தை மாற்ற விரும்பி முனிவர்களின் வழிகாட்டலில் நின்று துர்வாஸரை அணுகினாள். அவர் பிரும்மாவும் இந்திரனும் தவமிருந்து சிவபெருமானது அருள் பெற்ற

பாரிஜாதவனேசுவரரை வழிபடக் கூறினார். ஈசனை வழிபட மந்திரம் உபதேசித்தார்.

ரம்பை உடன் கும்பகோணத்திற்கு மேற்கே காவேரியின் வலது கரையில் உள்ள பிரும்மேச்வரம் சென்றடைந்தாள். பாரிஜாத வனத்தினுள் நுழைந்ததுமே அவளது மனம் சலனமின்றி அமைதிபெற்றது. பஞ்சாக்ஷர உபதேசம் பெற்றதால் மங்களமாக எல்லாம் அமைந்தன. பிரும்ம குண்டத்தில் முறைப்படி நீராடினாள். பின் காவேரியில் நீராடி மரவுரியும் மான் தோலும் உடுத்தி விபூதியும் ருத்திராக்ஷமும் அணிந்தவளாக மல்லி ஜாதி சம்பகம் முதலிய பூக்களால் ஈசனையும் மூன்று வேளைகளிலும் வழிபட்டாள். கிழங்கும், வேர்களும் பழங்களும் உணவாயின. ஒரு ஓலைக் குடிசையில் தங்கி பஞ்சாக்ஷர ஜபத்துடன் யோக முறையால் சலனமின்றி உள்ளத்தை ஈசனிடம் நிலைக்கச் செய்தாள். ஓராண்டு காலம் இடையூறின்றி தவம் நிகழ்ந்தது.

— ★ —

## அத்தியாம் —5

இந்திரன் தவத்திலுள்ள ரம்பையை ஸ்வர்கத்திற்கு பலாத்காரமாக அழைத்துவரத் தன் ஐராவத யானையை அனுப்பினான். ஐராவதமும் ரம்பையிடம் இந்திரனது ஆணையைத் தெரிவித்தது. ஈசனது அருளைப் பெற்ற பின்னரே அமராவதி வருவேன். இந்திரன் நேரில் வந்து அழைத்தால் தான் வருவேன் எனக் கூறி ஐராவதத்தின் மீதேற மறுத்தாள். மறுபடி வழிபாட்டில் ஈடுபட்டாள். தன் திட்டம் நிறைவேறாததைக் கண்ட ஐராவதம், வலிவில் அவளைத் தும்பிக்கையால் வளைத்துப் பிடித்துத் தூக்க முயன்றது. ரம்பை உடன் சிவலிங்கத்தைத் திடமாக அணைத்துக் கொண்டாள். உடன் ஐராவதத்தின் துதிக்கை வளையத்தை மீறி சிவன் வளர்ந்து பருத்தார். யானை தன் துதிக்கையை விடுவிக்கத் திணறியது. ரம்பையிடம் கோடி சிங்கங்களின் வலிவு வெளிப்பட்டது. லிங்கத்துடன் அவளைப் பெயர்த்தெடுக்க முயன்ற யானை லிங்கத்தின் முன் இரத்தம் கக்கித் தளர்ந்து கீழே விழுந்து உயிர் நீத்ததுபோலானது.

———

நாரதர் ஐராவதத்தின் நிலையை உடன் இந்திரனிடம் தெரிவித்தார். சிவனருளைப் பெற ரம்பைக்கு உதவிப் பின் ஐராவதத்தையும் விடுவித்து ரம்பையுடன் அமராவதி திரும்புவாயாக என்றார். ஐராவதத்தையும் ரம்பையையும் மீட்க வேறு வழி உணராத இந்திரன் விமானத்திலேறிப் பாரிஜாத வனம் வந்து ஈசனைத் துதித்தான்.

நாரதரின் சாபத்தால் ரம்பைக்கு நேர்ந்த தாழ்வையும் ரம்பையை மீட்பதில் ஐராவதத்தின் இயலாமையையும் நீக்க வேண்டிய இந்திரனுக்கு சிவ பெருமான் எதிரில் தோன்றி அருள் புரிந்தார். தன்னைப்பயத்தால் இறுகி அணைத்திருந்த ரம்பைக்கும் தன்னையும் ரம்பையையும் வலிவுடன் அகற்ற முயன்று உயிர் நீங்கும் தருவாயிலுள்ள ஐராவதத்திற்கும் ஆறுதலளித்தார்.

ஐராவதம் தன் தந்தங்களால் தன்னை இறுகப் பற்றிய போது தன் லிங்க உருவில் விழுந்த பள்ளத்தைத் தனக்கு அணியாக ஏற்று ஐராவதபுரம் என க்ஷேத்ரம் புகழ் பெற அருள் புரிந்தார். யானையின் காதணிகளும் கண்டா மணியும் விழுந்த இடத்தில் லிங்கத்தை வைத்து ஐராவதத்தை வழிபடச்செய்து அருள் புரிந்தார். முன்னிருந்ததை விடக் கோடி மடங்கு வலிவு கூடியதை ஐராவதம் உணர்ந்து வணங்கியது. இறைவன் கூறியதை ஒட்டித் தன் கண்டாமணி விழுந்த இடத்தில் கண்டா மூர்த்தீசுவர லிங்கத்தை அமைத்து ஐராவதம் வழிபட்டது.

ரம்பையும் ஈசனின் வலப்புறத்தில் வில்லடி தூரத்தில் புஷ்யராக ரத்தினத்தாலான லிங்கத்தை அமைத்து மணமிக்க பூக்களால் வழிபட்டாள். அவர் ரம்பேசர். அவரது அருளால் ரம்பை மறுபடி அமராவதி திரும்பி இனிது வாழ்ந்தாள். வானவர் ஈசனது புகழ்பாடி வானில் வலம் வந்தனர். ஐராவதமும் இந்திரனும் ரம்பையும் அமராவதி சென்றதும் அங்கிருந்து தெய்வ மரங்களின் பூக்களை வானிலிருந்து மழையாகப் பொழிந்தனர். அதனால் பூக்களால் நிறைந்த அந்த க்ஷேத்திரத்தைப் புஷ்ப புரம் என்றனர். புஷ்ப புரேச்வரர் என ஈசன் புகழ்பெற்றார். பாரிஜாதவனேசர், பிரும்ம புரேசுவரர், இந்திர புரீச்வரர் - புஷ்ப புரேச்வரர், ஐராவத புரேச்வரர் என்று

ஐந்து ஈசனின் நாமங்களக் கூறுபவர் கைலாஸம் செல்வர். ராக்ஷஸ - பூத - பிசாச பாதைகள் நீங்கும்.

— ★ —

## அத்தியாயம் -6

### இந்திரஸேனன் வரலாறு.

ஸூர்யவம்சத்தரசரான இந்திரஸேனன் காம்பில்ய நகரிலிருந்து ஆண்டான். மக்கள் பேறும் பெருஞ் செல்வமும் பெற்ற அவன் பெருவள்ளல். வீரன், நன்கு கற்றறிந்தவன், தைவபக்தி மிக்கவன். அவனது ஆட்சியின் கீழ் பல சிற்றரசர்கள் இருந்தனர். ஒருநாள் மான்வேட்டைக்கெனப் புறப்பட்டுப் பலவகை மான்கள் நிறைந்த காட்டினுள் சென்றான். நடுப்பகலில் ஸூரியனின் வெப்பம் தாங்காமல் அவனது படை துவண்டது. அரசனும் வாடி ஒரு மரத்தடியில் அமர்ந்தான். பசியும் நாவரட்சியும் வாட்டக் களைத்த அவன் மரத்தடியில் ஆழ்ந்து தூங்கினான். அவனுக்கு ஒரு கனவு.

ஒரு கொடூரனான பிரும்மராக்ஷஸன் தன்னைத் தாக்குகிறான். ஒரு தவறும் புரியாத என்னை ஏன் இப்படி தாக்குகிறாய்? இனி நீ அடித்தால் நான் உன்னைத் தாக்கி அழிப்பேன் எனக் கனவில் அரசன் கூறினான். பிரும்ம ராக்ஷஸன் கூறினான். ''நானாக உன்னைத் தாக்கவில்லை. இதற்கு முன் எட்டாவது பிறவியில் நீ ஒரு அரச குமாரன். மகத ராஜகுமாரன் உன் தோழன். இருவரும் சுகதுக்கங்களில் பங்கு பெறுகிற சிறந்த நண்பர்கள். உன் நண்பனுக்குப் பிறந்த நாள் சனிக்கிழமையன்று நிகழ்ந்தது. அதற்குப் பரிஹாரமாக அவன் நிறைய தானம் வழங்கினான். நீ அதனை வீணே தடுத்தாய். அவனும் உன் விருப்பபடி தானம் வழங்குவதை நிறுத்தினான். தானத்தால் பணச்செலவே. ப்ரதிபலன் ஒன்றுமில்லை. வீண் செலவு செய்யாதே என்ற உன் கருத்தை அவன் ஏற்றான். வீணே தானம் என்ற நற் செயலைத் தடுத்ததன் விளைவாக நீ இன்று என் கைகளால் அடிபடுகிறாய். தானத்தைத் தடுத்து நிறுத்தியதால் அதனை எதிர்பார்த்து வந்த எளியவர்கள் மனம் குன்றித் திரும்பினர். 64 எளியவர்கள் உன்னால் துயருற்றனர். அத்தனை பிறவிகள் இவ்வாறு கனவில் பிரும்ம ரக்ஷஸால் அடிபட

விருக்கிறாய். தான் செய்த வினையின் பயனைத் தானே தான் அனுபவிக்க வேண்டும்.'' என்ற பிரும்ம ராக்ஷஸன் கூறியதைக் கேட்ட ராஜா நடுங்கித் தூக்கம் கலையப் பயத்துடன் விழித்தெழுந்தான். விழித்ததும் நினைவிழந்தான்.

அவனுக்குத் துணையாக வந்த அமைச்சர் முதலானோர், உடன் தலைநகருக்கு அரசனை அழைத்துச் சென்றனர். அவனது குமாரனை அரசனாக வரித்தனர். இந்திர ஸேனன் பிரம்ம ராக்ஷஸ பீடையால் மன நிலை இழந்து உணவும் தூக்கமுமின்றித் தனியே பித்தனாக நாட்டைச் சுற்றி வந்தான். இருபத்தோரு ஆண்டுகள் கடந்தன.

அவனது புதல்வன் சந்திரஸேனன் தந்தையின் மன நிலை தேறப் பல தானங்களை வழங்கினான். தன் மந்திரிகள் மூலம் பல பேரறிஞர்களைத் தன் ஸபைக்கு அழைத்தான். அவர்களிடம் தன் தந்தை நன்னிலை பெற வழிகேட்டான். பேரறிஞர்களில் ஒருவர் இதற்கு வழி காட்டினார். அவரது பெயர் வேத கர்ப்பர்.

''நன் மகனைப் பெற்ற உன் தந்தை விரைவில் நலம் பெறுவார். அறவழியறிந்த அரசன், தினமும் அக்னி ஹோத்ரம் செய்கிற அந்தணன், கடலைச் சென்றடைகிற நதீ, புராண படனம் தினமும் நடக்கிற இடம். கருமான் உலாவி வருகிற காடு, அரச மரம், வன்னிமரம், துளஸீ, பில்வமரம், இவை தழைத்த இடம், விபூதி ருத்திராக்ஷம் தரித்து பஞ்சாக்ஷர ஜபமும் ஐந்து தினசரி யஜ்ஞச் சடங்களும் செய்பவர் வசிக்குமிடம், இங்கு துயரம் ஏற்படாது. தானத்திற்கு இடையூறு விளைவித்த பாபச் செயல் உன் தந்தையைத் துன்புறுத்துகிறது. ஜம்பூத்வீபத்தில் பாரத வர்ஷத்தில் காவேரியின் இரு கரைகளிலும் பல புனிதமிக்க க்ஷேத்ரங்கள் உள்ளன. அவற்றில் உலகப் புகழ்பெற்ற கும்பகோணத்திற்கு மேற்கே பாரிஜாத வனம் உள்ளது. பிரும்மாதியர் தவமிருந்த இடம். அங்கு இவரை அழைத்துச் சென்று இவரது வினை தீரச் செய்வேன்'' என்றார்.

சந்த்ரஸேனன் உடன் வேத கர்ப்பருடன் தன் தந்தையைப் பல்லக்கில் ஏற்றிப் பாரிஜாத வனத்திற்கு

அனுப்பினுன். வேத கர்ப்பர் பாரிஜாத வனம் சென்று, பிரம்ம தீர்த்தத்தில் நீராடி தன் கமண்டலுவை நிரப்பி, பஞ்சாக்ஷர மந்திரம் ஜபித்து இந்திஸேனன் மீது தெளித்ததும் பாரிஜாதவநேச்வரர் அரசனே வினேக் கட்டிலிருந்து விடுவித்தார். அவனைத் துன்புறுத்திய பிரும்ம ராக்ஷஸனும் தன் வினேக் கட்டிலிருந்தும் விடுபட்டு விமான மேறிக் கைலாஸம் சென்றுன்.

அரசன் மனபேதலிப்பு நீங்கியவனுக முன் நினைவு பெற்று வேத கர்ப்பர் கூறியபடி பிரம்மேசுவரரை வழிபட்டான். வைகாசி விசாகத்தன்று சிவபெருமானை பஞ்சாமிருதம், பஞ்சகவ்யம் முதலியவற்ருல் நீராட்டி உபசரித்து ஏழு க்ராமங்களேத்யும் கோடி தங்கக் காசுகளேயும் தானமாக வழங்கினுன். ஆலயத்தின் மேம்பாட்டிற்கு அனைத்தையும் அளித்து வேத கர்ப்பரையும் பெருமைப் படுத்தினுன்.

வேத கர்ப்பரிடமிருந்து சிவபஞ்சாக்ஷர மந்திர உபதேசம் பெற்று, ஜபம் தியானம் முதலியவற்ருல் சிவனே வழிபட்டு மேனிலே அடைந்தான். இந்த இந்த்ர ஸேனனின் வரலாற்றைப் பக்தியுடன் கேட்க, சிவாபசாரம், மஹான்களின் அபசாரம் முதலிய வற்ருல் நேர்கிற துயர் நீங்கும்.

—★—

## அத்தியாம் - 7

### சாலிகர்

ரதந்தர கல்பத்து கிருத யுகத்தில் நர்மதைக் கரையில் சாலிகர் என்ற ருஷி தன் ஆச்ரமத்தில் தன் பெற்ரேருக்குப் பணிவிடைசெய்தவாறு தன் குடும்பத்தினருடன் வசித்து வந்தார். அவரது தந்தை தர்ம சீலர் காலமானதும் அவரது மனைவி யஜ்ஞசீலாவும் உடன்கட்டை ஏறினுள். இருவரது ஈமக் கடன்களேச் செய்து முடித்த சாலிகர் இருவரது அஸ்திகளேயும் கலசத்திலிட்டு மறுமையில் அவர்கள் மேனிலே பெற கங்கையில் இட நினைத்துத் தன் குடும்பத்துடன் கிளம்பினுர். அப்போது அங்கு வந்த நாரதரிடம் தான் தன் பெற்ரேரின்

அஸ்திகளைக் கங்கையில் கரைக்கச் செல்வதால் அவர்களும் தானும் கைலாஸத்தை அடைய வழி கூறக் கோரினுர். நாரதர் கூறினுர்.

உலகம் முழுவதும் சுற்றி வருகிற நான், சில இடங்களில் பிறந்தால் முக்தி, சில இடங்களைக் கண்டாலே முக்தி, காசியில் இறந்தால் முக்தி என்றவாறு கண்டுள்ளேன். காசியில் இறந்தவன் நரகம் செல்வதில்லை. அவனது பாபங்கள் அங்கு பயனற்றுப் போகின்றன. அதனுல் இறந்தவனின் அஸ்தியைக் காசியில் கரைத்ததும் பாபங்கள் அழிகின்றன. புண்யம் வளர்கிறது. அதனுல் நற்குலத்தில் பிறப்பும் சிவ பக்தியும் பெற்று ஸேது தர்சனம் பெற்றுக் காசியில் சென்று வஸிக்கிற வாய்ப்பைப் பெறுகிருன். காசியில் மரணமும் நேர்ந்து கைலாஸத்தை அடைகிருன்.

காசியை விட உயர்ந்த தொரு க்ஷேத்திரம் உண்டு. சாம்பல் பூத்த நெருப்புபோல் எளிதில் புலப்படாதது. பிரும்மா சிவன் நான் என்ற மூவரே இதனை அறிவோம். தக்ஷிண பாரதத்தில் காவேரிக் கரையில் பிரும்மா சிவ பெருமானை வழிபட்ட பாரிஜாத வனம் என்ற க்ஷேத்திரம் உள்ளது. இறந்தவரின் அஸ்தியை அங்கு பூமியினுள் போட்டாலே கைலாஸம் கிட்டும். ஒரு கழுகு எங்கேயோ இறந்து கிடந்தவரின் எலும்பைத் தன் அலகால் பற்றி அதனை பாரிஜாத வனத்தில் போட்டது. இதனைக் கண்ட நான் கைலாஸம் சென்றேன். அங்கு விமானத்தில் எலும்புக்குரியவன் வந்திறங்குவதைக் கண்டேன். நரகத்தில் விழத்தக்கவன் அவன். அவனது எலும்பு பாரிஜாத வனத்தில் விழுந்ததால் பெரும்பேருன கைலாஸ வாஸம் அவனுக்குக் கிட்டியது. உன் பெற்றேரின் அஸ்தியை அங்கு பூமியில் சேர்த்தவுடன் அவர்கள் கைலாஸ மடைவார்கள்.

அஸ்தி கலசத்துடன் அங்கு சென்று, பிரும்ம புஷ்கரிணிக் கரையில் பூமியில் அதைப் புதைத்துவிட்டு அதன்மீது தர்ப்பைகளைப் பரப்பி, பஞ்சாக்ஷர மந்திரம் ஜபித்த கலச நீரை விடுவாய். அவர்கள் நற்கதி பெறுவர். கேசங்களை மழித்து நீராடி க்ஷேத்திர உபவாஸமிருந்து அந்தணர்களுக்கு

உணவிடுவாய். முடிந்தால் அந்த இடத்தில் அரச மரத்தை நட்டு வளர்ப்பாய் எனக் கூறி நாரதர் மறைந்தார்.

அதனை ஏற்ற சாலிகர் அஸ்தி கலசத்துடன் ஐராவத க்ஷேத்திரம் சென்று அஸ்திகலசத்தைப் பூமியில் புதைக்குமுன் திறந்ததும் எலும்புகளனைத்தும் லிங்க வடிவடைந்ததைக் கண்டு வியந்து அதனைப் பூமியில் புதைத்து அரசமரம் நட்டு ஈமக்கிரியையை முடித்தார். தன் பெற்றோர் சிவ நிலை பெறுவதை உணர்ந்தார். பின் வெகு நாட்கள் வாழ்ந்து வாழ்வைச் சிவமயமாக்கி இறுதியில் சிவ நிலை பெற்றார்.

அலங்கார நாயகியுடன் பிரும்மேசர் இறப்பவரின் வலது காதில் பஞ்சாக்ஷர மந்திரம் ஓதித் தன்னிலை பெறச் செய்வார். அதனால் அந்த க்ஷேத்திர வாஸமும் அந்த க்ஷேத்திரத்தில் அந்திம நிலையும் மிகவும் வேண்டத் தக்கது. சிவ ராத்திரி தினத்தன்று நான்குயாமங்களும் விழித்திருந்து ஈசனை வழிபட்டு ஈசனின் பெருமையைப் பாடுவது மிக மிகச் சிறந்தது 'பில்வதளங்களால் அர்ச்சனை செய்வது சிவனுக்கு மிக உவப்பானது. அங்கேயே தங்கி க்ஷேத்ர உபவாஸமிருந்து முண்டனம் செய்து கொண்டு பித்ருக்களுக்குரிய சடங்குகளைச் செய்ய அவர்கள் திருப்தி பெறுவர். அதற்காகக் காளையைக் கட்டவிழ்த்து விடுவதும் சிறந்தது. ஒவ்வொரு மாதமும் அமாவாஸையன்று அங்கு நீராடி பித்ரு தர்பணம் செய்வது வம்ச விருத்தி அளிக்கும். அர்த்தோதயம், மஹோதயம், க்ரஹணம் முதலிய நாட்களில் காவேரியில் நீராடி ஈசனை வழிபடுவதும் பித்ருக்களுக்குரிய சடங்குகளைச் செய்வதும் எல்லா பாபங்களையும் நீக்கும். பல வேள்விகளைப் புரிந்த புண்யம் கிட்டும். நல்லோருக்குத் தானம் செய்வதும் உணவிடுவதும் ஆடை அரிசி பசு வழங்குவதும் நன் மக்களைப் பெற உதவும். கிருஷ்ண பக்ஷத்துச் சதுர்தசியுடன் கூடிய திங்கள்கிழமை, தக்ஷிணாயன - உத்தராயண புண்ய காலங்கள், மாதப் பிறப்பு, பௌர்ணமி, க்ரஹணம், மன்வாதி, யுகாதி, வைதிருதியோகம், வியதீபாதயோகம், ஆவணியின் ஞாயிற்றுக்கிழமைகள், இவற்றில் இந்த க்ஷேத்ர வாஸமும் ஈசனின் வழிபாடும் பித்ருக்களின் வழிபாடும் தானம் முதலியவையும் சிறந்த பலன்களைத் தரும்.

—★—

## அத்தியாம் - 8

### பக்தியற்ற க்ஷேத்ர வாஸ பலன்

உத்பலம் எனும் க்ராமத்தில் அக்ரஹாரத்தில் ஸோமசர்மா என்ற அந்தணன். பெருத்த குடும்பமும் வருவாயற்ற நிலேயும் அவனே யாசித்து வாழத் தூண்டின. காலப் போக்கில் மனேவியையும் குடும்பத்தையும் இழந்து தனியனுகிப் பிச்சை எடுத்து வாழ்ந்தான். அங்கு ஒரு அக்ரஹாரத்தில் ஒரு நல்ல அந்தணன் தூய நடைமுறையுடன் சிவபக்தனுக வாழ்ந்தான். தினமும் சக்திக் கேற்ற விரிவுடன் பூபழம் அபிஷேகப் பொருள் நிவேதனம் தூபம் தீபம் முதலியவற்றைச் சேமித்துச் சிவனே வழிபட்டான். ஸோம சர்மாவும் உணவை எதிர்பார்த்து அந்த சிவபூஜையைக் கண்டுகளித்தான். அந்த அந்தணனுடன் சிவனேப் பல தடவை வலம் வந்தான். இவனுக்குத் தான் பெற விருக்கிற இனிய உணவில் மட்டிலும் குறி. நல்ல வைதிக அந்தணன் வீட்டுச் சாப்பாட்டை வயிருர உண்டு அடுத்த வேளே உணவிற்கு வேறிடம் செல்கிற வழியில் கடும் மழைபெய்ய மரத்தடியில் ஒதுங்கியவன் மீது இடி விழுந்ததால் இறந்தான். கழுகும் நரியும் காக்கையும் அவன் உடலேத் தின்றன. சிவபூஜையைக் கண்டதும் சிவப் ப்ரஸாதமான உணவை உண்டதும் சிவனே வலம் வந்ததும் புண்ணியமாகிக் கழுகு வடிவில் வந்து அவனது எலும்பை பாரிஜாத வனத்தில் கொண்டு சேர்த்தது. முன் பாபவினேயால் ஏழ்மையும் இடியால் மரணமும், கழுகு முதலியவற்றிற்கு உணவானதும் ஏற்பட்டதெனினும் பக்தியின்றி வழிபாட்டில் கலந்து கொண்டாலும், வலம் வந்ததும் சிவனே தரிசித்ததும் புண்யமாகிய நிலே வியப்பிற்குரியதே. பல பிறவிகளில் செய்த பெரும் புண்யத்தின் பலனும் சிலருக்குச் சிறிதும் உள்ளத்தால் ஈடுபடாத புனிதச் செயலால் கிட்டுகிறது.

அதிதி வழிபாடும், ஈசனிடம் பக்தியுமின்றி சிவதர்சன வாய்ப்பு கிட்டாது. தன் கன்னிகையை உரிய நேரத்தில் மணம் செய்விப்பது, கோதானம் செய்வது, பெற்றேருக்குப்

பணிவிடை, நன்ளுளில் புனித நதிகளில் நீராடுவது, வேள்வி புரிவது முதலியதில் ஆர்வமற்றவனுக்குச் சிவ தரிசனம் கிட்டாது. அறிந்தோ அறியாமலோ பக்தியுடனே பக்திஇல்லாமலோ எதேச்சையாக சிவதர்சனம் பெற்றவனது வினை தானே அகன்று விடுகிறது. ஸோம சர்மா நற்கதி பெற்ருன். ஐராவத புரத்தைப் பக்தியுடன் நெருங்குபவர்களுக்கும் காவிரியிலும் மற்ற தீர்த்தங்களிலும் நீராடுபவர்களுக்கும், சிவதரிசனம் செய்பவர்களுக்கும் பாபவினைப் பயமில்லை. க்ஷேத்திரத்தில் செய்த அன்னதானம் பெரும்பலன் தரும். க்ஷேத்திரத்தில் தங்கி முறைப்படி பஞ்சாக்ஷர மந்த்ர ஜபம் செய்வது கோடிக் கணக்கில் சக்தி பெறும். அங்குள்ள காவேரியில் நீராடிஞல் மறுபடி தாயின் வயிற்றில் நுழைய நேராது.

சிவனை வழிபட்டு அங்க ப்ரதக்ஷிணமும் நமஸ்கார ப்ரதக்ஷிணமும் ஸோம ஸூத்ர ப்ரதக்ஷிணமும் செய்பவர் கொடும் துயரிலிருந்தும் விடுபடுவர். வலமும் இடமுமாக முறைப்படி வலம் வருவதும் சிறந்த பலன் தரும். இந்த க்ஷேத்திரத்து காவிரியில் புரிகிற மாக ஸ்நானம், துலாமாஸ ஸ்நானம் சிறந்தது. பௌர்ணமி, ஞாயிறு, திங்கள், வியதீ பாதம், விஷுவம், தக்ஷிணாயன - உத்தராயண புண்ய காலங்கள், இவை காவேரி ஸ்ஞனத்திற்கும் பித்ரு கர்மங்களுக்கும் ஏற்ற நாட்கள். சிவ ராத்ரியன்று கண் விழித்து ஒவ்வொரு யாமத்திலும் சிவனை அபிஷேகம் முதலியவற்ருல் வழிபடுவர். அப்போது பஞ்சகவ்யம் பால், தயிர், கருப்பஞ்சாறு, தேன், இளநீர், சந்தனக் குழம்பு, நல்லெண்ணெய், நெய் முதலியவற்ருல் சிவனுக்கு அபிஷேகம் செய்விப்பதும் அதனைக் கண் குளிரக் காண்பதும் பெரும் புண்யச் செயல். மார்கழியின் சுக்ல பக்ஷத்து ஷஷ்டியன்று தேவர்கள் தேவருலகத்துப் புஷ்பம் முதலானவற்ருல் வழிபடுவர். அந்தப் பூஜை வேளையில் சிவ தர்சனம் பெரும் புண்ணியம் தரும்.

—★—

## அத்தியாம் - 9

### தீர்த்தங்களின் பெருமை

பிரும்ம தீர்த்தம் :— பிரும்மாவால் அமைக்கப் பெற்றது. பிரும்ம ஜஜ்ஞானம் முதலிய வேத மந்த்ரங்கள் ஓதி இதில் நீராடி இதன் மேற்குக் கரையில் அன்னதானம் (சர்க்கரைப் பொங்கல் முதலியவை) வழங்க, பாபம் விலகும். பித்ருக்கள் கரை ஏறுவர். செய்பவரும் கைலாஸ மடைவார்.

ஸுதா கூபம் எனும் இந்திர தீர்த்தம் :— கார்த்திகை மாதத்துச் செவ்வாய்கிழமைகளில் நீராட பூத - பிரேத பிசாச பாதை விலகும். தங்கதானம் செய்ய மக்கட் பேறு கிட்டும். செல்வம் பெருகும். பித்ருக்கள் மேனிலே பெறுவர்.

காவேரீ :- இங்கு இது மிக மிகப் புனித மானது. கிரஹணம், அர்த்தோதயம், மஹோதயம் முதலிய புண்ய காலங்களில் இதில் நீராட சிவத்துரோஹ பாபம் விலகும். சிவலிங்கத்தைப் பெயர்த்து அகற்றுவது மிகப் பெரிய பாபம். பல பிறவிகளிலும் இது தொடரும். காவிரியில் நீராடித் தானம் செய்வது சிவாபராதம் நீங்க ஒரே வழி. வஸ்திரம், உணவு, பூமி, பசு, தனம் இவற்றைத் தானம் செய்வது மிக நல்லது. ஒவ்வொரு திங்கட்கிழமையிலும் நீராடுவது, மாசி, ஐப்பசி மாதங்களிலும் தினமும் நீராடுவது க்ருஷ்ணபக்ஷ சதுர்தசியன்று அந்தணர்க்கு உணவிடுவது, எல்லா கெட்டவினைகளையும் அகற்றும். புனித தூய வாழ்க்கை அமையும்.

இந்த க்ஷேத்ரத்தன் பெருமையை உணர்ந்து பக்தியுடன் இங்கு வசிப்பதம், பெருமையைக் கூறுவதும் கேட்பதும், சொல்பவரை மதித்துப் பாராட்டி ஸன்மானம் செய்வதும் நல்லது. பெருமையை உணர்ந்து க்ஷேத்திரத்தின் புனிதும் குன்றுமல் அங்கு வாழ்வது, க்ஷேத்ர தர்சனத்திற்கு வருபவருக்கு உதவுவதும் மிகச் சிறந்த பணி.

—★—

# श्री ऐरावतेश्वर अष्टोत्तरशतनामावळिः

ओं गौरीप्राणवल्लभाय नमः । देव्यै कथित चरिताय नमः । हालाहल गृहीताय नमः । लोकशंकराय नमः । कावेरीतीरवासिने नमः । ब्रह्मणा सुपूजिताय नमः । ब्रह्मणो वरदायिने नमः । ब्रह्मकुण्डपुरस्थिताय नमः । ब्रह्मणा स्तुताय नमः । कैलासनाथाय नमः । दिशां पतये नमः । सृष्टिस्थितिविनाशानां कर्त्रे नमः । गङ्गाधराय नमः । सोमाय नमः । रुद्राय नमः । अमिततेजसे नमः । पशूनां पतये नमः । पार्वतीपतये नमः । अन्तकारये नमः । नागाजिनधराय नमः ॥ २० ॥

ओं पुरुषाय नमः । महेशाय नमः । पुष्टानां पतये नमः । साम्बाय नमः । गुरवे नमः । कैवल्यपददायिने नमः । भवाय नमः । शर्वाय नमः । सदसस्पतये नमः । शंभवे नमः । गिरिशंताय नमः । नीलग्रीवाय नमः । कपर्दिने नमः । वरिष्ठाय नमः । महीयसे नमः । विश्वंभराय नमः । विश्वाय नमः । जगतांपतये नमः । सच्चिदानन्दरूपाय नमः । समस्तव्यस्त-रूपिणे नमः ॥ ४० ॥

ओं सोमविभूषाय नमः । विरूपाक्षाय नमः । समस्तमुनिवन्द्याय नमः । देवदेवाय नमः । महादेवाय नमः । भर्गाय नमः । मायातीताय नमः । कर्पूरधवलाङ्गाय नमः । मेरुकोदण्डधारिणे नमः । कुबेरबन्धवे नमः । कुमारजनकाय नमः । भूतिभूषितगात्राय नमः । त्रिणेत्राय नमः । भवरोग-विनाशाय नमः । भक्ताभीष्टप्रदायिने नमः । पञ्चास्याय नमः । इन्द्रदोषनिवृत्तिदाय नमः । इन्द्रेण अमृताभिषिक्ताय नमः ।

सुधाकूपजलाभिषिक्ताय नमः । रम्भया सुपूजिताय नमः ॥ ६० ॥

ओं रम्भालिङ्गितगात्राय नमः । इन्द्रेण स्तुताय नमः । कारणकारणाय नमः । पिनाकपाणये नमः । देवेशाय नमः । गिरीन्द्रशायिने नमः । अनन्तमूर्तये नमः । शिवया समेताय नमः । प्रपञ्चविस्तारविशेषशून्याय नमः । त्रयीमयेशाय नमः । सर्वप्रधानाय नमः । सतां मताय नमः । मृत्युंजयाय नमः । त्रिपुरान्तकाय नमः । जटाभारविभूषिताय नमः । अखिल-लोकसाक्षिणे नमः । सुसूक्ष्मरूपाय नमः । दिगम्बराय नमः । शूलपाणये नमः । सुरवन्दिताय नमः ॥ ८० ॥

ओं विष्णुसुपूजिताय नमः । अखिललोकवन्द्याय नमः । कल्याणरूपाय नमः । सदाशिवाय नमः । सर्वज्ञमूर्तये नमः । सकलागमाय नमः । भीमाय नमः । नित्याय नमः । कृपालवे नमः । भक्तपरायणाय नमः । समस्तार्तिहराय नमः । रम्भाशापविमोचकाय नमः । ऐरावतदोषनिवृत्तिकराय नमः । गजोत्तमवरदायिने नमः । पञ्चमुनिभिः प्रशस्तवैभवाय नमः । पञ्चमूर्तिस्वरूपाय नमः । पञ्चामृताभिषेक सुप्रीताय नमः । पञ्चपुष्पसुपूजिताय नमः । पञ्चाक्षरजपसिद्धि प्रदायकाय नमः । पञ्चपातकनाशकाय नमः ॥ १००

ओं भक्तरक्षणदीक्षिताय नमः । दर्शनादेव भुक्तिमुक्ति-दाय नमः । पञ्चनाम्ना प्रसिद्ध वैभवाय नमः । पारिजात-वनेशाय नमः । ब्रह्मेशाय नमः । इन्द्रपुरीशाय नमः । पुष्पवनेशाय नमः । श्री अलङ्कारवल्लीसमेत श्री ऐरावतेश्वराय नमः ॥ १०८

## ஐராவதேச்வரர் துதி

(ப்ரம்மா செய்தது)

நம: கைலாஸ நாதாய திஶாஞ்ச பதயே நம: ।
ஸ்ருஷ்டி ஸ்திதி விநாஶாநாம் கர்த்ரே கங்காதராய ச ॥ 1

நம: ஸோமாய ருத்ராய பவாயாமித தேஜஸே ।
பஶுநாம் பதயே துப்ப்யம் பார்வதீபதயே நம: ॥ 2

நமோऽந்தகாரயே துப்யம் நாகாஜிந தராய ச ।
புருஷாய மஹேஶாய புஷ்டாநாம் பதயே நம: ॥ 3

நம: ஸாம்பாய குரவே கைவல்ய பததாயிநே ।
நமோ பவாய ஶர்வாய ஸதஸஸ்பதயே நம: ॥ 4

ஶம்பவே கிரி ஶந்தாய நீல க்ரீவாய தே நம: ।
நம: கபர்திநே துப்ப்யம் வரிஷ்ட்டாய மஹீயஸே ॥ 5

விஶ்வம்ப்பராய விஶ்வாய ஜகதாம்பதயே நம: ।
ஸச்சிதாநந்த ரூபாய ஸமஸ்த வ்யஸ்த ரூபிணே ॥ 6

நம: ஸோம விபூஷாய விரூபாக்ஷாய தே நம: ।
ஸமஸ்த முநி வந்த்யாய தேவதேவாய தே நம: ॥ 7

மஹாதேவாய பர்காய மாயாதீதாய தே நம: ।
கர்பூரதவளாங்காய மேருகோதண்டதாரிணே ॥ 8

குபேர பந்தவே துப்யம் குமார ஜநகாய ச ।
பூதி பூஷித காத்ராய த்ரிணேத்ராய நமோ நம: ॥ 9

பவ ரோக விநாஶாய பக்தாபீஷ்ட ப்ரதாயிநே ।
பாரிஜாத வநேஶாய பஞ்சாஸ்யாய நமோ நம: ॥ 10

(மாஹாத்ம்யம். அத்.1.58.67)

## ஐராவதேச்வரர் துதி - 2

(தேவேந்த்ரன் செய்தது)

நமோ நம: காரண காரணாய
பிநாகபாணே பகவன் நமஸ்தே ।
நமோஸ்து தேவேஶ ஸுபாரிஜாத-
வநாதிவாஸாய கிரீந்த்ரஶாயிநே ॥ 1 ॥

அநந்த மூர்த்தே கஜசர்மதாரின்
த்ரிணேத்ரதாரின் ஶிவயா ஸமேத ।
ப்ரபஞ்சவிஸ்தாரவிஶேஷஶூந்ய
த்ரயீமயேஶாந நமோ நமஸ்தே ॥ 2 ॥

ஸர்வப்ரதாநாய ஸதாம் மதாய
ம்ருத்யுஞ்ஜயாய த்ரிபுராந்தகாய ।
நமோ ஜடாபாரவிபூஷிதாய
கங்காதராயாகிலலோகஸாக்ஷிணே ॥ 3 ॥

ஸுஸூக்ஷ்மரூபாய திகம்பராய
ஶ்ரீபார்வதீஶாய நமோ நமஸ்தே ।
நமோ நம: ஶங்கர ஶூலபாணே
நமோ நமஸ்தே ஸுரவந்திதாய ॥ 4 ॥

நமோ நமோ விஷ்ணுஸுபூஜிதாய
ப்ரஹ்மேஶ்வராயாகிலலோகவந்த்ய ।
கல்யாணரூபாய பவாய துப்யம்
ஸோமாய ஶர்வாய மஹேஶ்வராய ॥ 5 ॥

கைலாஸ நாதாய ஸதாஶிவாய
ஸர்வஜ்ஞமூர்த்தே ஸகலாகமாய ।
ருத்ராய பீமாய நமோ நமஸ்தே
நித்யாய தே தீர்க்கஜடாதராய ॥ 6 ॥

க்ருபாளவே பக்தபராயணாய
நமஸ்ஸமஸ்தார்த்திஹராய துப்யம் ।
ஐராவதேஶாய ஸதாஶிவாய
பக்தேஷ்டதாத்ரே ஸகலார்ச்சிதாய ॥ 7 ॥

(மாஹாத்ம்யம் அத்.5 ச்லோ-21)

## ஸ்ரீ ஐராவதேச்வர அஷ்டோத்தரசத நாமாவளி

ஓம் கௌரீ ப்ராண வல்லபாய நம: । தேவ்யை கதித சரிதாய நம: । ஹாலாஹல க்ருஹீதாய நம: । லோகஶங்கராய நம: । காவேரீ தீர வாஸிநே நம: । ப்ரம்ஹ்மணா ஸுபூஜிதாய நம: । ப்ரஹ்மணோ வரதாயிநே நம: । ப்ரஹ்மகுண்ட புர ஸ்திதாய நம: । ப்ரம்ஹணா ஸ்துதாய நம: । கைலாஸ நாதாய நம: । திஶாம்பதயே நம: । ஸ்ருஷ்டிஸ்திதி விநாஶாநாம் கர்த்ரே நம: । கங்காதராய நம: । ஸோமாய நம: । ருத்ராய நம: । அமிததேஜஸே நம: । பஶூநாம் பதயே நம: । பார்வதீ பதயே நம: । அந்தகாரயே । நாகாஜிந தராய நம: ॥ 20

ஓம் புருஷாய நம: । மஹேஶாய நம: । புஷ்டாநாம் பதயே நம: । ஸாம்பாய நம: । குரவே நம: । கைவல்ய பததாயிநே நம: । பவாய நம: । ஶர்வாய நம: । ஸதஸஸ்பதயே நம: । ஶம்பவே நம: । கிரிஶந்தாய நம: । நீலக்ரீவாய நம: । கபர்திநே நம: । வரிஷ்டாய நம: । மஹீயஸே நம: । விஶ்வம்பராய நம: । விஶ்வஸ்மை நம: । ஜகதாம் பதயே நம: । ஸச்சிதாநந்த ரூபாய நம: । ஸமஸ்தவ்யஸ்த ரூபிணே நம: ॥ 40

ஓம் ஸோம விபூஷாய நம: । விரூபாக்ஷாய நம: । ஸமஸ்த முநிவந்த்யாய நம: । தேவதேவாய நம: । மஹாதேவாய நம: । பர்காய நம: । மாயாதீதாய நம: । கர்ப்பூர தவளாங்காய நம: । மேரு கோதண்ட தாரிணே நம: । குபேர பந்தவே நம: । குமார ஜநகாய நம: । பூதிபூஷிதகாத்ராய நம: । த்ரிணேத்ராய நம: । பவரோக விநாஶாய நம: । பக்தாபீஷ்ட ப்ரதாயிநே நம: । பஞ்சாஸ்யாய நம: । இந்த்ர தோஷ நிவ்ருத்திதாய நம: । இந்த்ரேண அம்ருதாபிஷிக்தாய நம: । ஸுதாகூப ஜலாபிஷிக்தாய நம: । ரம்பயா ஸுபூஜிதாய நம: ॥ 60

ஓம் ரம்பாலிங்கித காத்ராய நம: । இந்த்ரேண ஸ்துதாய நம: । காரண காரணாய நம: । பிநாக பாணயே நம: । தேவேஶாய நம: । கிரீந்த்ரஶாயிநே நம: । அநந்த மூர்த்தயே நம: । ஶிவயா ஸமேதாய நம: । ப்ரபஞ்சவிஸ்தாரவிசேஷ ஶூந்யாய நம: । த்ரயீமயேஶாய நம: । ஸர்வ ப்ரதாநாய நம: । ஸதாம் மதாய நம: ।

ம்ருத்யுஞ்ஜயாய நம: । த்ரிபுராந்தகாய நம: । ஜடாபார விபூஷிதாய நம: । அகிலலோக ஸாக்ஷிணே நம: । ஸுஸூக்ஷ்ம ரூபாய நம: । திகம்பராய நம: । ஶூலபாணயே நம: । ஸுரவந்திதாய நம: ॥ 80

ஓம் விஷ்ணுஸுபூஜிதாய நம: । அகிலலோக வந்த்யாய நம: । கல்யாண ரூபாய நம: । ஸதாஶிவாய நம: । ஸர்வஜ்ஞ மூர்தயே நம: । ஸகலாகமாய நம: । பீமாய நம: । நித்யாய நம: । க்ருபாலவே நம: । பக்த பராயணாய நம: । ஸமஸ்தார்த்திஹராய நம: । ரம்பாஶாபவிமோசகாய நம: । ஐராவத தோஷ நிவ்ருத்தி கராய நம: । கஜோத்தம வரதாயிநே நம: । பஞ்சமுநிபி: ப்ரஶஸ்த வைபவாய நம: । பஞ்சமூர்த்திஸ்வரூபாய நம: । பஞ்சாம்ருதாபிஷேக ஸுப்ரீதாய நம: । பஞ்சபுஷ்பஸுபூஜிதாய நம: । பஞ்சாக்ஷரஜபஸித்தி ப்ரதாயகாய நம: । பஞ்சபாதக நாசகாய நம: ॥ 100 ॥

ஓம் பக்தரக்ஷணதீக்ஷிதாய நம: । தர்ஶனாதேவ புக்தி முக்திதாய நம: । பஞ்சநாம்நாப்ரஸித்த வைபவாய நம: । பாரிஜாத வநேஶாய நம: । ப்ரம்ஹேஶாய நம: । இந்த்ரபுரீஶாய நம: । புஷ்பவநேஶாய நம: । ஸ்ரீ அலங்காரவல்லீ ஸமேத ஸ்ரீ ஐராவதேச்வராய நம: ॥ 108

* * *

## ஐராவதேச்வர நாமஸ்மரணம்

பாரிஜாதவநேசாந ஸ்ரீமத்ப்ரம்ஹபுராதிப ।
ஸ்ரீமதிந்த்ரபுரீவாஸ ஸ்ரீமத்புஷ்பபுரீச்வர ॥ 1

ஐராவதபுராதீச பஞ்சநாமாநி ய: படேத் ।
ஸ கைலாஸ மவாப்நோதி ஸத்யம் ஸத்யம் வதாம்யஹம் ॥ 2

ரக்ஷோ பூதபிசாசாச்ச சாகினீடாகினீக்ரஹா: ।
கூஷ்மாண்டபூதவேதாளா: யே சான்யே புருஷாதகா: ।
நச்யந்தி தர்சநாதேவ ஸ்ரீமத் புஷ்பபுரஸ்ய ச ॥

**மாஹாத்ம்யம் - 5- 53 - 56**

